23rd August 1960]

*Kundah Hydro-electric scheme*

***411 Q.—SRI S. M. ANNAMALAI :** கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேளவிகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) குந்தா மின்சாரத் திட்டத்தில் சில குறைபாடுகள் உள்ளனவா என்று கேட்டு மத்திய சர்க்காரிடமிருந்து கடிதம் வந்ததா ?

(ஆ) அப்படியானால் அதை இந்த சர்க்கார் பரிசீலனை செய்தார்களா ?

(இ) அதன் முடிவென்ன ?

THE HON. SRI V. RAMAIAH : (*a*) No, Sir.

(*b*) & (*c*) Does not arise.

*Irrigation wells*

***412 Q.—SRI P. G. MANICKAM :** கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) லோயர் பவானி வாய்க்கால் பிரதேசத்திலே வாய்க்காலுக்கு 2-பர்லாங் தூரத்திற்கு அப்புறம் விவசாயக் கிணறுகள் வெட்டிக்கொள்ள சர்க்காரால் அனுமதி கொடுத்தபிறகு கிணறு வெட்டிக்கொள்ள அனுமதி கொடுக்கும்படியாக எத்தனை விவசாயிகள் சர்க்காருக்கு விண்ணப்பித்தார்கள் ?

(ஆ) இவர்களுள் எத்தனை பேர்களுக்கு விவசாயக் கிணறுகள் வெட்டிக் கொள்வதற்கு சர்க்காரால் அனுமதி கொடுக்கப்பட்டது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Five.

(*b*) Two.

**SRI P. G. MANICKAM :** மேற்கண்ட உத்தரவு சர்க்காரால் அனுப்பப்பட்டிருந்தும் அதை அங்குள்ள அதிகாரிகள் இன்னும் வெளியிட்டதாகத் தெரியவில்லை. ஆகவே சர்க்கார் மூலமாகவே இவ்வாறு கிணறு வெட்டுவதற்கு உத்தரவு அனுப்பப்பட்டிருக்கிறது என்று விளம்பரம் செய்யப்படுமா ?

**THE HON. SRI M. A. MANICKAVELU :** சென்ற வருடமே இதற்கு உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. அதைத் தெரிந்துதான் ஐந்து பேர்கள் கிணறு வெட்ட கேட்டிருந்தார்கள். ஏற்கனவே இரண்டு பேர்களுக்கு கொடுத்தாகிவிட்டது. இன்னும் மூன்று பேர்களின் காரியம் விசாரணையில் இருக்கிறாப்போல் இருக்கிறது. விஷயம் தெரிந்துதான் இவர்கள் மனு போட்டிருக்கிறார்கள்.